# 59

## சந்திப்பு

'இந்த ஊருக்கு வந்த பிறகு ஓய்வே இல்லை! அதுதான், 'ஹெட் குவார்ட்டர்ஸ்' ஆஸ்பத்திரிக்கு வருவதற்கு எல்லோரும் பயப்படு கிறார்கள்' என்று டாக்டர் ருக்மிணி, எம்.பி.பி.எஸ். நர்ஸ், வைர மணியிடம் சொல்லிக்கொண்டு 'விஸிட்டு'க்குப் போய்விட்டு வந்த களைப்பில் 'உஸ்' என்று சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டாள்.

'எல்லோருக்குமே இந்த மாதிரி வேலை இருக்கிறதில்லையம்மா! உங்களுக்குமுன் இங்கே இருந்த டாக்டர் மிஸஸ் ரோஸ் அம்மாளுக்கு ஆஸ்பத்திரி வேலையைத் தவிர வெளியே வேலையே இராது. உங்களுக்குத்தான் 'பிரைவேட்' வேலை இவ்வளவு அதிகமாக இருக் கிறது' என்று நர்ஸ் சொன்னாள்.

'ஆஸ்பத்திரியில் வேலையைக் காணோமே?'

'ஆஸ்பத்திரிக்குக் கெட்ட பெயர் வந்துவிட்டதம்மா. சரியாகப் பார்க்கிறதில்லை யென்று பலர் சொந்த வைத்தியம் செய்து கொள்ளு கிறார்கள்.'

டாக்டர் ருக்மிணி சென்னைக் கோஷா ஆஸ்பத்திரியின் சூபரிண்டெண் டெண்டாக வந்து நான்கு மாசங்களே ஆகியிருந்தன. அதற்கு முன் வடக்கே ஆந்திர தேசத்தில் பல ஊர்களில் இருந்தாள். அவளுடைய கைராசியைப்பற்றிய தகவல் அவளுக்கு முன்பே சென்னைக்கு வந்து விட்டதுபோல் இருந்தது. வந்தது முதலே ஆஸ்பத்திரிநேரம் போக மற்றப் பொழுதில் அவளுக்கு ஏதாவது அழைப்பு இருந்துகொண்டே இருந்தது. கோபாலபுரத்துப் பங்களாவிலும் காலை ஐந்துமணி முதல் ஏழுமணி வரையிலும், மாலை இரண்டு முதல் நாலு வரையிலும் கும்பலாகவே இருந்தது.

இரவு பத்து மணி. கீழே இருந்த மலையாளிச் சேவகன் வாசலில் யாரோ வந்திருப்பதாக வந்து தெரிவித்தான்.

'பத்து மணிக்கா? சை, இதென்ன உபத்திரவம்? காலையில் வரச்

*கலைமகள், ஜூன்-1942*

சொல்!' என்றாள் ருக்மிணி.

'சொன்னேன் அம்மா, ரொம்ப அவசரமாம்.'

'அவசரமா? நோயாளிகளுக்கு எப்பொழுதும் அவசரந்தான். டாக்டர் என்ன யந்திரமா? என்ன கேஸ்?'

'உங்களைப் பார்க்கவேண்டும் என்கிறார்.'

'முடியாது; என்ன அவசரம் என்று எழுதி வேண்டுமானால் வாங்கிக் கொண்டு வா, பார்ப்போம்.'

வேலைக்காரன் கீழே போனான்.

'டாக்டர் அகால நேரத்தில் வரவில்லை என்றால் கடினசித்தம் என்று வசவு வருகிறது. என்ன சங்கடம்! இந்தத் தொழிலே–' என்று சொல்லி நிறுத்தி ருக்மிணி மௌனமானாள்.

மலையாளி ஒரு காகிதத்துடன் திரும்பி வந்தான். அதில் பின் வருமாறு எழுதியிருந்தது:

'மாடம்,

அவசரமான கேஸ். என் மனைவிக்கு 'அபார்ஷன்' ஏற்பட்டு நான்கு நாட்கள் ஆகின்றன. ஜுரம் கண்டு பிதற்றுகிறாள். தயை செய்து உடனே வரவேண்டும்.

தங்கள்
எஸ். சுந்தரம்.
கிளார்க்; சீப் ஸெக்ரடேரியட்.'

அதைப் படித்ததும் ருக்மிணி நாற்காலியில் அசைவற்றுப் போய்விட்டாள். எஸ். சுந்தரம்–சீப்ஸெக்ரடேரியட் கிளார்க்! என்ன விபரீதம்! அவள் யார் என்று அவருக்குத் தெரியாதோ? எப்படித் தெரியாமல் இருக்கும்? டாக்டர் ருக்மணி சென்னைக்கு மாற்றப்பட்டு வந்திருப்பதைப் பத்திரிகையில் அவர் பார்த்திருக்கமாட்டாரா? தெரிந்திருந்தால் வருவாரா என்ன? எட்டு வருஷங்கள் ஆகிவிட்டதால் பெயரே மறந்து போயிருக்கலாம்... அவர்தாமோ, வேறு யாரோ? எஸ். சுந்தரம் என்று எத்தனை பெயர்களோ? ஆனால், அவர்தாம் சீப் ஸெக்ரடேரியட்டில் வேலையாக இருந்தார். இன்னுமா, இவ்வளவு வருஷங்களுக்குப் பிறகு அங்கே இருப்பார்? இந்தத் தர்ம சங்கடத்திற்கு என்ன செய்வது?

'யார் அது?' என்று வைரமணி கேட்டது அவள் காதில் விழவில்லை.

ருக்மிணியின் கணவர்தாம் சுந்தரம். கல்யாணமான ஒரு வருஷத்திற்குள் மாப்பிள்ளைக்கும் மாமனாருக்கும் சண்டை. மாமனார் நல்ல சொத்துக்காரர். மாப்பிள்ளை பெற்றோரை விட்டுவிட்டுத் தம்மிடம் வந்திருக்கவேண்டும் என்று அவர் விரும்பினார். தம் பெண் அந்தப் பெரிய குடும்பத்தில் போய்ச் சிரமப் படக் கூடாது என்பது அவர் எண்ணம். மாப்பிள்ளை மறுத்துவிட்டார்; மாமனார் பெண்ணைக்

கணவனிடம் அனுப்புவதில்லை என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். சுந்தரம் தம் மனைவிக்கு ஒரு கடிதம் எழுதினார். பதில் இல்லை. தாய், வேறு கல்யாணம் செய்து வைத்தாள். அவ்வளவு தான்; மாமனாரின் வைராக்கியம் தீர்க்கமாயிற்று. 'இண்டர்மீடியட்' தேறினதும் பெண்ணை 'மெடிகல் காலேஜி'ல் சேர்த்து விட்டார்.

ருக்மிணி முதலில் கணவர் சார்பாகத் தகப்பனாருடன் வாதாடினாள். கணவரின் கடிதத்திற்கு இணங்கிப் புக்ககம் போவதென்றுகூடக் கொஞ்சம் துணிச்சல்கொண்டாள். பிறகு என்னவோ அதைரியம் ஏற்பட்டு எல்லாம் சரியாகப் போகும் என்று இருந்து விட்டாள். கணவருக்குக் கல்யாணம் ஆன தகவல் கேட்டதுந்தான் அவள் மனம் கசந்துவிட்டது. தகப்பனார் போக்கை முற்றும் அனுசரித்துவிட்டாள்.

இப்போது தாய்தந்தையர் இருவரும் இல்லை. சொத்து முழுவதற்கும் அவளே வாரிசு. ஆனால் என்ன பிரயோஜனம்? அவள் வாழ்க்கை சூன்யமாக இருந்தது. கணவரைப் பற்றி எண்ண இடமில்லை. இரண்டாந் தாரத்திற்குக் குழந்தைகள் இருந்தன. தானாக அவருக்குக் கடிதம் எழுதக்கூட அவளுக்கு மனம் வரவில்லை. அவரும் அவளைப் பற்றிய நினைவையே ஒழித்துவிட்டார் என்று தெரிந்தது.

'என்ன தயங்குகிறீர்கள் அம்மா? நான் வேண்டுமானால் போய் அவரைக் காலையில் வரச்சொல்லுகிறேன்' என்றாள் வைரமணி.

'இல்லை; கார் எடுத்துக்கொண்டு ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்து 'ஆம்புலன்ஸு'டன் திருவல்லிக்கேணி, அக்பர் சாகேப் தெரு, 18ஆம் நம்பர் வீட்டிற்குப் போய் நோயாளியை இங்கே கொண்டு வா!' என்று சொல்லிவிட்டு ருக்மிணி சட்டென்று ஒரு தீர்மானத்திற்கு வந்தவள் போல் எழுந்திருந்தாள்.

'இந்த நேரத்தில்–'

'ஆர். எம். ஓ. வுக்குக் கடிதம் தருகிறேன் என்று ஒரு காகிதத்தை எடுத்து இரண்டு வரி எழுதிக் கொடுத்தாள். வைரமணி மேலே ஒன்றும் பேசாமல் கீழே போனாள்.

'இந்தா, வைரமணி: அங்கே போய் நீ இருந்து கொண்டு நமது காரை உடனே அனுப்பு' என்று ருக்மிணி, போனவள் பின்னால் உரக்கச் சொன்னாள்.

'சரி, அம்மா' என்று பதில் வந்தது. ஆனால் வைரமணிக்கு ஒன்றும் புரியவில்லை. கீழே போய் டிரைவரைக் கூப்பிட்டுக் காரை எடுக்கச் சொல்லிவிட்டுக் காத்துக்கொண்டிருந்தவரை ஒருதரம் பார்த்தாள்.

அவருக்குச் சுமார் முப்பது வயசு இருக்கும் கிராப் தலையில் அகாலத்தில், சற்று வழுக்கை விழுந்திருந்தது. முகத்தில் கவலைக் குறி தாண்டவமாடியது. இருப்புக் கொள்ளாதவர்போல அங்கும் இங்கும் போய்க் கொண்டிருந்தார்.

வைரமணியைக் கண்டதும் பரபரப்புடன் ஏதோ சொல்ல வாயெடுத்தார்.

'இருங்கள்; டாக்டர் அம்மா வருவார்கள்!' என்று சுருக்கமாகச் சொல்லிவிட்டு அவள் காரில் போய் ஏறிக் கொண்டாள்.

கார் 'காம்பவுண்டை' விட்டு வெளியே போனதும் ருக்மிணி திடமாகக் கீழே இறங்கி வந்தாள்.

மின்சார விளக்கின் வெளிச்சத்தில் அவள் முகத்தைப் பார்த்ததும், சுந்தரம் திடுக்கிட்டுப் போனார். ஆமாம், தம் மனைவிதான். எட்டு வருஷங்களுக்குப் பிறகும் அடையாளம் நன்றாகத் தெரிந்தது. அதே மாசு மறுவற்ற முகம்; சற்று உயரம்; அதற்கேற்ற பருமன்.

'நீ-நீங்கள்-' என்று சுந்தரம் பதற்றத்துடன் ஆரம்பித்தார்.

'நீ என்றே சொல்லலாமே! நான் நான்கு மாசங்களாக இங்கேதான் இருக்கிறேன். உடம்பு எப்படி இருக்கிறது?'

'எனக்குத் தெரியாது. ஆபீஸ் கிளார்க்கு ஒருவர் கோஷா ஆஸ்பத்திரி டாக்டர், ரொம்பக் கெட்டிக்காரி என்று சாயந்தரம் சொன்னார்-'

'உட்காருங்கள்; ஜுரம் அதிகமாக இருக்கிறதா?'

'ரொம்ப-'

'அபாஷன் ஏற்பட்டு எத்தனை நாட்கள் ஆகின்றன?'

'நான்கு நாட்களாகின்றன.'

'அடடா! முன்பே, உடனே வரக்கூடாதோ? 'ஆம்புலன்ஸி'ல் இங்கே கொண்டுவந்து விடும்படி நர்ஸை அனுப்பியிருக்கிறேன். சிகிச்சைக்கு இங்கே இருந்தால்தான் சௌகரியம். கார் வரும். நீங்கள், கூடப்போய் அழைத்து வாருங்கள்.'

'குழந்தைகள், வீட்டில்-'

'குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு வந்து விடுங்கள்; உட்காருங்கள்' என்று அவர் உட்கார்ந்த பிறகு ருக்மிணி தானும் ஒரு நாற்காலியில் அமர்ந்தாள்.

இருவருக்கும் என்ன பேசுவதென்றே தெரியவில்லை. வெகு நேரம் மௌனமாகவே உட்கார்ந்திருந்தார்கள்.

கார் வரும் சப்தம் கேட்டதும் ருக்மிணி எழுந்து நின்று, 'நீங்கள் இதில் போய்க் குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு வாருங்கள்' என்று சொல்லி விட்டு டிரைவரைக் கூப்பிட்டு, 'ராஜு, இவரைக் கூட்டிக் கொண்டு போய்விட்டு வா!' என்றாள்.

ராஜுவுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

'இவரை-' என்று இழுத்தான்.

'ஆமாம்- இவரை-இவர் வீட்டுக்கு ஏற்றிக் கொண்டு போ. அங்கிருந்து மறுபடியும் இங்கே ஏற்றிக்கொண்டு வா. அர்த்தமாயிற்றா?' என்று கடுமையாகச் சொன்னாள்.

ராஜு உடனே வெகு பவ்யமாக, 'வாருங்கள், ஸார்' என்று அவரை அழைத்துக்கொண்டு போனான். ருக்மிணி உள்ளே போய்ச் சமையற் காரனை மேலும் மூன்று பேருக்குச் சாப்பாடு தயார்செய்யச் சொன்னாள். தானும் தன் அறைக்குச் சென்று 'வாயில்' புடைவையைக் களைந்து விட்டு நீலப் பட்டுப் புடைவை ஒன்றை அணிந்துகொண்டாள். எட்டு வருஷங்களுக்குப் பிறகு, அவள் அதுவரையில் இடங்கொடுக்காமல் அடக்கி வைத்திருந்த ஓர் உணர்ச்சி அவளை அறியாமல் திடீரென்று பொங்கி எழுந்தது.

நிலைக்கண்ணாடியின் அருகில்போய் நின்று தலையைச் சீவி விட்டுக் கொண்டாள். குங்குமப் பொட்டைப் புதிதாக இட்டுக்கொண்டாள்.

எட்டு வருஷங்களுக்குப் பிறகு இனிமேல், இந்த ஜன்மத்தில் சந்திப்பு இல்லை என்று எண்ணியிருந்த கணவருடன் இன்று திடீரென்று, இருவருக்கும் எதிர்பாராமல், இப்படியா சந்திப்பு நேரவேண்டும்! அவரும் உடனே அடையாளம் கண்டுகொண்டார். தெரியாமல் என்ன? முகம் மாறிவிடுமா என்ன?

பங்களாவின் வாசலில் கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டு ருக்மிணி வராந்தாவிற்கு வந்தாள். நர்ஸும் டிரைவரும் இறங்கி, சக்கரம் வைத்த கட்டிலைக் கொண்டுபோய் நோயாளியை மெதுவாக அதில் எடுத்துப் படுக்கவைத்து உள்ளே தள்ளிக்கொண்டு போனார்கள்.

சுந்தரம் இரண்டு குழந்தைகளுடன் காரிலிருந்து இறங்கி வந்தார். பெரிய குழந்தை ஆறு வயசுள்ள பெண்; சின்னக் குழந்தை நான்கு வயசுப் பையன். ருக்மிணி ஆவலுடன் அவர்களைப் பார்த்தாள். அவர்கள் தன் வயிற்றில் பிறந்திருக்க வேண்டியவர்கள் என்ற எண்ணம் ஏற்பட்டதும் அவளுக்கு ஒருவிதமான உள்ளப்பூரிப்பும் ஏக்கமும் ஏககாலத்தில் உண்டாயின. தாவிச் சென்று அவ்விருவரையும் பற்றிக் கட்டிக் கொண்டாள்.

'உன் பெயரென்ன, கண்ணு?' என்று பெண்ணின் பெயரைக் கேட்டாள்.

அப்பெண் சிறிது தயங்கிப் பிறகு, 'ருக்குமிணி' என்றாள்.

ருக்மிணிக்கு உடம்பெல்லாம் மயிர்ச்சிலிர்ப்பு ஏற்பட்டது.

'உன் பெயர்?' என்று சிறுவனைக் கேட்டாள்.

'எம் பேரு ஆம மூர்த்தி' என்றான் அவன்.

'அட கண்ணே!' என்று பெரு மகிழ்ச்சியுடன் ருக்மிணி அவனை முத்தமிட்டுக்கொண்டாள்.

கடமையை மறந்துவிட்டவள்போலச் சட்டென்று நினைவுபெற்று எழுந்து நோயாளியிடம் போனாள்.

நோயாளி இருபத்திரண்டு வயசுள்ள அழகிய பெண். இளைத்துத் துரும்பாக இருந்தாள். ருக்மிணி நர்ஸுடன் தனியாக இருந்துகொண்டு

நோயாளியைப் பரிசோதனை செய்தாள்.

அவள் பரிதாபப் பார்வையுடன் டாக்டரைப் பார்த்து, 'நான் பிழைப்பேனா?' என்று கேட்டாள்.

'கவலைப்படாதே, அம்மா; சொஸ்தமாக்குகிறேன்' என்று சொல்லி விட்டு, ருக்மிணி நர்ஸிடம் ஏதோ ஒரு மருந்தைக் கொடுக்கச் சொல்லி விட்டு வெளியே வந்தாள்.

'அபார்ஷன்' ஆனவுடனேயே ஏன் வரவில்லை?' என்று வைத்திய தோரணையில் சுந்தரத்தைக் கேட்டாள்.

'முன்பு இரண்டு 'அபார்ஷன்கள்' ஒன்றுமில்லை. இதுவும் அப்படித் தான் என்று இருந்துவிட்டேன். எப்படி இருக்கிறது?'

'கடுமையாக இருக்கிறது. வயிற்றில் 'ஸெப்ஸிஸ்'.

'பிழைப்பாளா?'

'எப்படிச் சொல்வது?'

'அவள் மட்டும் சொன்னாள்: இந்தத் தடவை முன்போல இல்லை என்றாள்' என்று சொல்லும் போது சுந்தரத்தின் கண்களில் ஜலம் மளமளவென்று பெருகிற்று.

'ஸெண்டிமெண்ட்', 'பலவீனம்' என்று பேசிக் கொண்டு திரியும் பிரகிருதிகளைக்கூட ஆட்டிவைக்கும் சந்தர்ப்பங்கள் உண்டு. எட்டு வருஷங்களாகக் கஷ்டங்களைப் பார்த்துப் பார்த்து உணர்ச்சி மங்கிப் போயிருந்த ருக்மிணிகூடக் கணவன் கலங்கினதைக் கண்டதும் தன்னை அறியாமல் அழுதுவிட்டாள். மறு நிமிஷம் சமாளித்துக்கொண்டு, 'இனிமேல் வலி வேதனை இல்லாமல் செய்வதைத் தவிர வேறொன்றும் இல்லை; போங்கள்! அருகில் போய் உட்காருங்கள். நான் குழந்தை களைப் பார்த்துக் கொள்ளுகிறேன்' என்றாள்.

ருக்மிணி குழந்தைகளுக்குத் தானே ஆகாரம் கொடுத்துக் கதைகளைச் சொல்லித் தூங்கவைத்தாள்.

சுந்தரம் அங்கே வந்து, 'அவள் உன்னைக் கூப்பிடுகிறாள்' என்றார்.

ருக்மிணி உள்ளே போனாள். சுந்தரம் வெளியே நின்றுவிட்டார். அவளைக் கண்டதும் நோயாளி பலவீனமான குரலில், 'அக்கா, இப்பொழுது தான் சொன்னார். கவலை விட்டது... நான் பிழைக்க மாட்டேன். குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளுங்கள்...அவர் ஒன்றும் தெரியாதவர்' என்று திணறிக் கொண்டே சொன்னபோது அவள் கண்களில் நீர் ததும்பிற்று.

ருக்மிணி குனிந்து அவள் முகத்துடன் முகம் வைத்து, 'கண்மணி, உன் போகமெல்லாம் இவ்வளவு சட்டென்று–' என்று மெய்ம்மறந்து பேச ஆரம்பித்தவள் சட்டென்று நிறுத்திக்கொண்டு, 'எவ்வளவு ஆசை உன் மனத்தில்?' என்றாள்.

'அவர்மேல் உனக்குக் கோபம் இல்லையே, அக்கா?'

'நானல்லவா தப்பு செய்தவள்?'

'அவரைக் கூப்பிடுங்கள்.'

சற்றுத் தூரத்திலிருந்து மறைந்து கேட்டுக் கொண்டிருந்த சுந்தரம் அங்கே வந்தார்.

அப்பொழுது மூன்று உள்ளங்கள் அலைகொண்டு கொந்தளித்தன. மரணத்தை நெருங்கிவிட்டவளின் உள்ளந்தான் சற்றுத் தெளிவாயிற்று.

மௌனமாக ருக்மிணியையும் கணவனையும் அருகில் அழைத்து இருவர் கைகளையும் ஒன்றில் ஒன்றை வைத்து, 'குழந்தைகளைப் பார்த்துக்கொள்கிறோம் என்று சொல்லுங்கள்' என்றாள்.

அந்த மகத்தான கட்டளைக்கு இருவரும் தலை வணங்கினார்கள். அந்த மெலிந்த கையை எடுத்து ருக்மிணி மரியாதையுடன் முத்த மிட்டாள். சுந்தரத்திடம் கொடுத்தாள். சுந்தரம் மனமிழந்தவராய் அதைக் கண்களில் ஒற்றிக்கொண்டார்.

'இனிமேல் நான் சாகலாம், அக்கா!' என்று ஒருவிதமான திருப்தி முகத்தில் திடீரென்று மலர, அவள் கண்களை மூடிக்கொண்டாள்.

தூரத்தில், கடற்கரையில் வரும் அலைமேல், திரும்பும் அலை மோதி, உயர்ந்து, இரண்டும் கலந்து ஒலித்தன. இங்கே சாவின் சந்நிதானத்தில் இரண்டு உள்ளங்கள் உயர்ந்து மோதி ஒன்றாகி அடங்கின.